உ

சிவமயம்.

சித்தகன்னி

# வீரசத்திவிநாயகர் பதிகம்

இஃது

பூவுற்றகுடிநகரம்

சு. வை. மீனாக்ஷிசுந்தரஞ்செட்டியாரால்

இயற்றப்பட்டு

தஞ்சாவூர் கருந்தட்டான்குடி சதாவதானம்

சுப்பிரமணியய்யரவர்களால்

பார்வையிடப்பட்டு

சுப்பிரமணியபுரம்

த. வீ தம்பாசெட்டியார்

சகாயத்தால்

சிதம்பரம்,

...கசரண அச்சியந்திரசாலையிற்

...ப்பிக்கப்பட்டது.

...7-8-17.

உ

சிவமயம்.

சித்தகன்னி

# வீரசத்திவிநாயகர்பதிகம்.

இஃது

பூவுற்றகுடிநகரம்

சு. வை. மீனாக்ஷிசுந்தரஞ்செட்டியாரால்

இயற்றப்பட்டு

தஞ்சாவூர் கருந்தட்டான்குடி சதாவதானம்

சுப்பிரமணியய்யரவர்களால்

பார்வையிடப்பட்டு

சுப்பிரமணியபுரம்

த. வீ தம்பாசெட்டியார்

சகாயத்தால்

சிதம்பரம்,

ஸ்ரீ குஞ்சிதசரண அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

27-8-17.

உ

சிவமயம்.



# சாற்றுக்கவி.

சீர்மலிந்த சித்தகன்னி யெனும் ப்தியி
லானைமுகச்செம்ம றன்னைப்
பார்மலிந்த சுப்ரமண்ய புரமருவு வீரப்பப்
பாங்கன் றுபித்
தேர்மலிந்த பூசனைகளியற்றி வந்தா னவன்
சூனென்றியம்புந் தம்பான்
பேர்மலிந்த வாணிபன்செய் சிவபுண்ய ],
மனைத்தனையும் பேசலாமோ.

அன்னான்றன் றிருப்புதலவன் வீரப்பனெனு
நாய்க னத்தியான
முன்னோனுக் கியற்றிவைத்த திருப்பணியின்
றகைமைத்தான் மொழியதற் பாற்றே

இன்னோன்றன் கான்முளைகளி ராமலெக்கு
மணரென்றே வியம்ப லாவார்
தன்னேரிலான் மூத்தோன் பேர்தம்பா
வணிகனெனத் தரித்த சீலன்.

அப்பெரியோன் முயற்சியினால் வீரசத்தி
விநாயகனுக் கருமை வாய்ந்த
திப்பிய பூசனை தீபநந்தனந் தெங்குச்சோலை
செய்கள் வாவி

யொப்பிலாத் திருப்பணிக ளின்ன வெலாஞ்
சேகரஞ்செய் துதவினானற்
றப்பிலான் செய்யறங் களனைத்து மெடுத்
துரைத்திட நாற்றரமிலோமே.

சதுர்மறைக டொழுதேத்து வீரசத்தி
விநாயகற்குத் தாசனாகி
மதுரமொழி யுளதம்பா வணிக
னவதரித்தானை வதனன்றன்னை

விதிமுறையாற் பூசைசெய்து வரும்பயனுற்
காசி வீரப்ப னென்னு
மகிபனவன் வழிவந்தா னப்புதல்வன்
பத்திதனை யறையலாமோ.

சீர்நிறைந்த சித்தகன்னிப் பதிவாழ்க
வானைமுகச் செம்மல் வாழ்க
கார்நிறைந்த சுப்பிரமண்ய புரம்வாழ்கத்
தம்பானுங் கனவான் வாழ்க
வேர்நிறைந்த காசிவீரப்ப னுடனவன்
ருதை யென்றும் வாழ்க
பேர்நிறைந்த மீனுட்சி சுந்தரனும்
பாவலனும் பெருகி வாழ்க.



உ

சிவமயம்.

# நா. சிவராமச்செட்டியார் அவர்கள்

இயற்றிய

# சாற்றுக்கவி.

---

சீர்சா லுலகிற் றிகழ்தரப் புகழ்பெறு
ஏர்சால் சித்தகன்னி யென்றெழி லுறு
வித்தகர் போற்று வியணகரதனில்
மெத்துகுண முளவீரப்பவணிகன்

அமைத்த வாலயத் தமர்ந்தினி துறைந்தே
தம்பா வணிகனன் புடனியற்றும்
இன்பார்பூசை யெழி லுறக் கொண்டே
வேண்டு சித்திகள் வேண்டியவாறே

காண்டக வளித்துக் கருணையோடுறையும்
வீரசத்தி விநாயகர்க் கினிய
பாரோர் போற்றும் பதிகமிசைத்தான்
பூவுற்றகுடிநகர் பொலிந்திடு தூயன்
கற்றவர் மெச்சுறு நற்குணசீலன்
மீனாக்ஷி சுந்தர னென்னும்
வானாண் மதிப்புடைமா பண்டிதனே.





உ

சிவமயம்.

# சித்தகன்னி

# வீரசத்திவிநாயகர் பதிகம்.



## காப்பு.

### வெண்பா.

சித்தகன்னி யென்னுந் திருப்பதியில் வாழ்வீர
சத்தி விநாயகன் பொற்றாள்பரவி—யத்தம்
பனிரண்டான் முன்னவனும் பண்ணவன் மேற்பா
யினிமையுடனே புனைவே னின்று, [வை

## பதிகம்.

ஓங்காரத் துள்ளொளிர்ளியா யுறைவான் றன்னை
யுண்மை யறிவானந்த வுருவானானை
யாங்கார மூளகணனை யழியாவென்றி யத்திமுகத்
தவுணன்றனை நமக்களித்தான் றன்னைப்
பாங்காக விருந்தடியார்க் கருள்செய்வானைப்
பழமறைக டொழுதேத்தும் பாதத்தானை
யீங்கார மணிவானைச் சித்தகன்னி வீரசத்தி
விநாயகனை வேண்டி வாழ்வாம். (க)

சித்திபுத்தி வல்லபையார்க் குரியான் றன்னைத்
தீயாரைச் சேரானைச் சேர்ந்தார் தங்கள்
பத்தியினில் விளைவானை மறைக டோராப்
பரஞ்சுடரைப் பாசவினை பற்றற்றானை
மத்தமொடு மதியணிந் தான்மருமான் றன்னை
வல்லசுரற் கொன்றான்முன் வந்தான் றன்னை
வித்தமய மாணவனைச் சித்தகன்னி வீரசத்தி
விநாயகனை வேண்டி வாழ்வாம். (உ)

நித்தியனை நிட்களனைப் பஞ்ச பூத
நிறமாகி யுலகமெலா நிறைந்துள் ளானைத்
தத்துவனைத் தத்துவத்தைக் கடந்தான் றன்னைச்
சர்வ பரிபூரணனைத் தயையுள் ளானை
யத்தனைமுன் வலவந்தக் கனிகொண் டானை
யரியயனே முதலான வமரர் வாழ்வை
வித்தகனை யுத்தமனைச் சித்தகன்னி வீரசத்தி
விநாயகனை வேண்டிவாழ்வாம். (௩)

தசமுகனைத் தூக்கிப் பந்தாடி னானைச்
சரணடைய வன்னானுக் கருள்செய் தானைக்
கசமுகனைக் கணபதியைக் கௌரி சேயைக்
கங்கையணி சடையானை மங்கை பாக
னசலவில்லான் ரத்தத்சைப் பொடிசெய்தானை
யகத்தியன்றன் கடநீரைக் கவிழ்த்தான் றன்னைப்
விசயநடம் புரிவானைச் சித்தகன்னி வீரசத்தி
விநாயகனை வேண்டி வாழ்வாம். (௪)

தள்ளுதிரைக் கடல்கடைய விடந்தந் தானைத்
தமியேனுக் கிருநிதியந் தருவான் றன்னை
கள்ளூரு செந்தாமரையான் பூக்கொண்டானைக்
கனிட்டனுக்கா வனத்தானை வடிவாய் வந்து
வள்ளிதனை மணம்புணர்த்தி வைத்தான் றன்னை
வானவர்கோன் நந்தவனம் வாழ்வித்தானை
விள்ளுமலர்ப் பதத்தானைச் சித்தகன்னி வீரசத்தி
விநாயகனை வேண்டி வாழ்வாம். (௫)

கடலிலெழு மாரமுதாய்க் கனியாய்த் தேனாய்க்
கற்கண்டாய்ச் சர்க்கரையாய்க் கரும்பின் சாறாய்
மடலுடையபூமலராய் மணமாய்ப்பாகாய் வானமுதாய்
பகல் வெளியாய் மண்ணாய் விண்ணாய்த்
திடமுடைய பூதமுமாய்த் தேவா யெங்குந்
திகழ்வானைத் தெரிவரிய வுருவத் தானை
விடையுடையானுமை மகனைச் சித்தகன்னி வீரசத்தி
விநாயகனை வேண்டி வாழ்வாம். (௬)

முக்கணனை முச்சுடரை மூன்றோன் றன்னை
முடிகத்தி னிவர்வானை முந்நூ லானை
யக்கரங்க ளனைத்தினிலு மமர்வான் றன்னை
யைங்கரங்க ளுடையானை யமலன் றன்னைத்
திக்காடை புனைவானை யனித்த நித்தந்தெரிந்
திகத்தின் மூவாசை யற்றோர்க் கொன்றாய்
விக்கினங்க ளறுப்பானைச் சித்தகன்னி வீரசத்தி
விநாயகனை வேண்டி வாழ்வாம். (எ)

பழையானைப் புதியானை யணுவு மாகிப்
பருப்பதமு மாவானைப் பரமா னானை
நிழலாகி யடியார்க்கு நிற்பான் றன்னை
நேசித்த வரங்க ளெல்லாம் நேருவானை
தழைசெவிக ளுடையானை யைந்தாம் வேதந்
தானெனவே பாரதத்தை யெழுதி னானை
விழைவுடைய சக்தானைச் சித்தகன்னி வீரசத்தி
விநாயகனை வேண்டி வாழ்வாம். (அ)

சுப்பிரம ணியபுரத்திற் றம்பா நாய்கன்
சுதனும்வீ ரப்பத் தூணிகன்செய் பேற்று
வெப்புவியி ...கரிக்த தம்பாநாய்க னினமுன்னோர்
செய்தளியி லெழுந்தா... ...ன்னை
திப்பியனை யத்தம்பா வணிகன் றாய சிந்தை
குடிகொண் டருளுஞ் செய்வான் றன்னை
விப்பிரர்கள் கொண்டாடுஞ் சித்தகன்னி வீரசத்தி
விநாயகனை வேண்டி வாழ்வாம். (௯)

சுந்தரியா டிருமுலைப்பா லுண்டான் றன்னை
றாய்மூர்த்தம் பனிரெண்டா யுறைவான் றன்னை
சந்ததமு மடியேனுக் கிரங்கு வானை
சகலவித பாக்கியமுந் தருவான் றன்னை
வந்தனமீ னாட்சி சுந்தரன்சொல் பாவின்கண்
வழுவுளவா யிருந்தாலுங் குணமாய்க் கொண்டு
விந்தையுடன் னினைவானைச் சித்தகன்னி வீரசத்தி
விநாயகனை வேண்டி வாழ்வாம். (10)

